# கசடதபற

36 & 37 மே-ஜூன் 1975 50 காசு



லினோ : ஆர். பி. பாஸ்கரன்

இரு கவிதைகள் :

## மக்கள், தனி மனிதன்

முன்தாவிச் சென்றதெல்லாம்
பின்வரும் மந்தைக்கு
வழிகாட்டியென நினைத்துக் கொண்டன—
இடையன்மட்டும் பின்னால்
குரல்கொடுத்து குறிப்பாய்
பெருவழியைக் காட்டித் தொடர.

## அபத்தம்

உறக்கம் வராப்பொழுதொன்றில்
இறுக்கம் தவிர்க்க, புகைபோக வேண்டி
ஒருக்களித்து திறந்திருக்கும் ஜன்னலூடே
ஊரின் அமைதியில் உறங்கிப்போன
கவிந்த ஆலமரத்தில்
தாகூரின் தாடித்தலை சோகமாய்

செதில்கள், எங்கிருந்தோ பரவிவரும் விளக்கொளியில்
மழைத்துளிகளாய் மின்னியும், மந்தமாய்,
மறுஇழுப்பில் பார்வை திரும்ப
அறைமூலையில் காலணிகள் ஒன்றன்மேல் ஒன்றென
நாய்க்குட்டிகளாக.

தொங்கும் ஒட்டடைகளிடையே
மூலைக்கு மூலை கலங்கி சிலிர்த்தும்.

உயிரற்றுக் கொடியில் தொங்கும் சட்டைகள்
தத்தம் மௌனத்தில் அகாலத்தைக் காட்ட

மாறிமாறி வரும் நினைவுகள் பாதிப்பில்
இருக்கையின் இழப்பாகி—
நேரங்கள் சில தனிமையை
உணர்த்திக் கழிகின்றன—மனவெறுமையில்.

ஆர். பழனிவேலு

# இரு கவிதைகள்

## 1

கரப்பானைப் பற்றிக் கொண்டது பல்லி கரப்பான்
தண்ணீர்ப் பக்கெட்டின் வெளியில்கனுக்காண
உள்ளே யிருந்து வெளிப்பட்டபோது
அவசரப் படாமல் தின்றது பல்லி அதன் குறிகள்
கரப்பானுக்கு மௌனமாய்ப் போதித்ததெவ் வுண்மை?
விலக்கி விடாமல் இருந்து பார்த்து கரப்பான்
மிஞ்சாமல் மறைந்ததும் எழுந்துபோய்த் தண்ணீர்
குடித்துத் திரும்பிப் பக்கெட்டைப் பார்த்தேன்
கவிஞன் எதிரில் கொலைக்கிடம் கொடுத்ததைக்
காட்டிக் கொள்ளாதிருந்தந்த நீல பக்கெட்டு.

## 2

கணக்குப் போட்டான் விடை பிறர்க்குத்
தெரியாதிருக்க அவன் மறைத்தான்
ஒருத்தன் பார்த்தால் அவனுக்குக்
கண்ணிரண்டும் முஷ்டிகளாகும்
பலகைகள் எல்லாம் கீழ்வைத்தார்
இடைவேளைக்கும் உணவுக்கும்
பள்ளிக் கூட மணி அசைய
பலகை அடுக்கப் படுகிறது
ஒன்றின் மேலே ஒன்ருக
சரியும் தப்பும் சரியாக
அவனைப் பார்த்தான் அவன் சரியாய்ச்
செய்தான் என்றே கருதியதால்
இவனைப் பார்த்தான் இவன் சரியாய்ச்
செய்தான் என்றே கருதியதால்
ஆமாம் என்று நான் நினைத்தேன்
உனதென்ருலும் என்னதென்
ருலும் என்ன நம்விடைகள்
இன்னென்றுக்குப் பொருந்தணுமே.

—ஞானக்கூத்தன்

## கவிதை தலைப்பிடப்படாதது

இந்தக் கவிதை
எப்படி முடியும்
எங்கு முடியும்
என்று தெரியாது

திட்டமிட்டு முடியாது
என்றெனக்குத் தெரியும்
இது முடியும் போது
இருக்கும் (இருந்தால்) நான்
ஆரம்பத்தில் இருந்தவன் தானா

ஏன் இந்தக் கேள்வி
யாரை நோக்கி

இன்றிரவு உணவருந்தும்
நம்பிக்கையில் இங்கிருப்பேன்

இப்படியும் ஓர் நம்பிக்கை

இருந்த நேற்று
எனக்கிருண்ட கணங்கள்

அவற்றின் தவளைக் குரல்கள்
கேட்கும் அடிக்கடி

அதனை ஒதுக்கத் தெரியாமல்
தவிக்கையில்

நிகழ்ச்சியின் சப்தங்கள்
செவிப் பறை கிழிக்கும்

நாளை ஓர் ஒளிக்கடலாய்
கண்ணைப் பறிக்கும்

இருதயம்
இதோ இதோ என்று துடிக்கும்

— ஆத்மாநாம்

## முடிவு

இன்று முடிந்து விட்டது
முடியாமல் தொடர்ந்து

முடிவைத் தேடித் தேடி
அலையும் கால்கள்
சோர்ந்து விழும் படுக்கையில்

மனம் மேலே இன்னும் மேலே
பறந்து செல்லும்

எங்கே முடிவு

படபடக்கும் காகிதங்கள்
கேலி செய்யும்
சல சலக்கும் இலைகள்
தாளம் போடும்

எப்படி இருக்கும் முடிவு
காற்றிலா மண்ணிலா நீரிலா

காலம் காலமாய்த் தேடியவர்
இருக்கின்றார்
ஆழ்ந்த உறக்கத்தில்
இம் மண்ணுக்குள்
என்றாே என் கனவில்
வந்தது முடிவு
சரியாகப் புலப்படவில்லை
பரந்த வெளியில் நான்
சூரியன் தலைப்பக்கம்
கடல் காலடியில்
எங்கே உன்னைக் காணோம்
இவ்வளவு காலமாய் என்றேன்
யார் நீ என்றொரு குரல்
உன்னைத்தேடி அலுத்த
ஆரம்பம் என்று கூற
உன்னுள்தான் இருக்கிறேன்
என்றது முடிவு
பின் இப்போது என்பதற்குள்
காலை புலப்பட்டது

—ஆத்மாநாம்

# இன்றைக்கும் நாளைக்குமிடையே

நாடகத்தில் சொற்கள்... பற்றியதொரு ஆராய்ச்சியில் ராகேஷ் பல வருடங்கள் ஈடுபட்டிருந்தார். அவருடைய சோதனைப் படைப்புகளில் இதுவொன்று...

## ஒன்று

(ராகேஷ் சாளரத்தின் அருகே)

இன்றைய ஸ்திரமற்ற தன்மை, எதிர்ப்பு, மறுதளிப்பு, நாசவேலை மாணவன்...தொழிலாளி... அவரவர் நிலையில் குழப்பம். ... உண்மையிலேயே இன்று வரை வாழ்க்கை ஒரு பிரமை ... ஒரு ஏமாற்றம்தானு? எதற்குமே...எந்த அர்த்தமும் இல்லையா?

(ராகேஷ் சாளரத்திலிருந்து விலகி மேஜையினருகே வந்துவிடுகிருன்)

சொற்கள்:— மண்டைக்குள் ஒரு காடே முளைத்துவிட்டது போலிருக்கிறது.

## இரண்டு

இரண்டு நிமிடம்

அ : காடு. ராகேஷ் மாடியிலிருந்து காட்டைப்பார்க்கிருன்.

ஆ: காட்டில் உலாவும் காலடி ஓசை.

இ : திறந்த, சூனியமான வான வெளி

உ : ஒரு சிறிய குழந்தை அம்மணமாய் உலவுகிறது.

ஊ: பறக்கும் பறவைகள்.

உண்மையிலேயே இந்த நம்பிக்கை ஏற்பட்டு விட்டால், மனத்தில் இந்த சஞ்சலம் இருக்காது. ஆனல் சஞ்சலம் மறையாது. ஏன் என்ருல் ஏதோ வொன்று ஆழ்ந்த சூனியத்தின் உள்ளேயும், கூட ஒரு அர்த்தமிருப்பதாக தோற்றுவித்துக் கொண்டேயிருக்கிறது. அந்த ஏதோ வொன்றின் பரபரப்பு மனத்தின் ஏதோ ஒரு மூலையில் எப்பொழுதும் இருந்து கொண்டே இருக்கிறது.

சொற்கள் :— மனம் அந்தப் பரபரப்பைப் பிடித்துவிட விரும்புகிறது. அதற்கொரு பெயர் தர விரும்புகிறது.

## மூன்று

(ராகேஷ் சாய்வு நாற்காலியில் அமர்ந்து ஒரு படத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.)

### ஒரு நிமிடம்

ஆனால் இந்தக் குறுகுறுப்பை அமுக்கிவிட எத்தனையோ எத்தனையோ வித செல்வாக்குகள் உள்ளன.

வாழ்வின் அன்றாட அலுவல்கள். சந்திக்கும் மனிதர்கள். தோள்களில் அமர்ந்து கொண்டிருக்கும் நகரம். மூளையில் சுழன்று கொண்டிருக்கும் ஸ்டீம் ரோலர்.

(ராகேஷ் படத்தை டீப்பாயின் மீது எறிகின்றான்.)

சொற்கள் —இருட்டு! இருட்டு! இருட்டு! இந்த இருட்டுக்கு ஏதாவது பதில் இருக்க முடியுமா?

## நான்கு

அ : இருட்டில் ஊசலாடும் ஹரிக்கேன் விளக்கு.

ஆ: நகரத்து மின் விளக்குகள்.

இ : நகரத்தின் கும்பல். கூட்டம்.

உ : (ராகேஷ் பாதையைக் கடக்கிறான்) மோட்டார்களின் குழல் ஒலிகள்.

### இரண்டு நிமிடம்

ஒரு விளக்கு...ஒளிரும் நம்பிக்கை.

பல விளக்குகள் — பிரமை, கூட்டம், கும்பல் காடு.

காட்டிலே தன்னை இழந்துவிட்ட மனிதன்.

சொற்கள் :— மனிதன் இல்லை...சொற்கள்...

## ஐந்தாவது

(ராகேஷ் மேஜையினருகே நின்று நாற்காலியின் முதுகைப் பிடித்து ஆட்டிக் கொண்டிருக்கிறான்.)

### அரை நிமிடம்

"எத்தனையோ முயற்சி செய்தும், அந்த ஒரு சொல், ஒரே ஒரு சொல், மனிதனின் தேடல்...அந்தத் தேடலின் ஒவ்வொரு பதிலையும் வெளிப் படுத்தக் கூடிய அந்த ஒரே ஒரு சொல் கிடைக்கவில்லை." (ராகேஷ் நாற்காலியை ஆட்டுவதை நிறுத்திவிடுகிறான்.)

சொற்கள் :— சொற்களுக்குப் பதிலாக எதிரே வந்து விடுகின்றன கண்கள்.

# ஆருவது

### ஒற்றை நிமிடம்

அ: சில ஜோடிக் கண்கள். வெவ்வேருன பாவத்துடன்.

ஆ: இருட்டு அதில் வண்டி வந்து நிற்கும் ஓசை.

இ: ஒரு குருடனின் இமைக்கும் விழிகள்.

ஈ: துயரமிகுந்தமுகம்

இதுதான் வாழ்க்கையென நான் சொல்ல விரும்புகிறேன். உற்சாகமுண்டாகிறது ஆனுல் இந்த உற்சாகத்தை ஒரு விபத்து நசுக்கி விடுகிறது குருடன் போல் மலங்க மலங்க விழித்துக் கொண்டுநிற்கிருன் மனிதன்: அப்பொழுது வாழ்க்கை ஒரு துயாமான சித்திரம்போல் இல்லை.. ஒன்றல்ல பல பல துயரச் சித்திரங்களாகத் தோன்றுகிறது.

# ஏழு

### (ராகேஷின் குளோஸ் அப்)

### அரை நிமிடம்

தம்முகமே நமக்கு அறிமுகமற்றதாய் தோன்றத் துவங்கி விடுகிறது. தேடல் வீண் எனத் தோன்றுகிறது. சிந்திப்பதும் வீண். எதற்கும் எந்த அர்த்தமும் இல்லை

(க்ளோஸ்அப்.. மங்கலாகி ஆடும் பாதங்களுடன் இரண்டறக்கலந்து விடுகிறது)

சொற்கள் .— ஆனுல் இங்கு வந்தும் கூட மனம் சலிப்பதில்லை.

# எட்டு

### ஒரு நிமிடம்

அ: அந்த முகத்தின் முன்னே ஆடும் பெண்களின் அசையும் பாதங்கள்.

ஆ: அந்த முகத்தின் முன்னே நடுங்கும் அலைகள்.

இ: அந்த முகத்தின் முன்னே ஒரு குழந்தையின் சிரிப்பு.

ஈ: அந்த முகத்தின் முன்னே பாதையில் நடந்து செல்லும் ராகேஷின்...காலடிகள்.

மனிதனின் துடிப்பில் மீண்டும் வாழ்வின் நடனம் ஆரம்பமாகி விடுகிறது.

ஒரு சொல்லா இவற்றிற்கு?

எத்தனை எத்தனையோ அலைகள் எழும்பிவருகின்றன. ஒரு புன் முறுவல் மீண்டும் அர்த்தங்களை நிரப்பவாரம்பித்து விடுகிறது ஒரு சொல்தானு இவற்றிகெல்லாம்?

சொற்கள்: ...தேடல் தொடர்கின்றது.

தமிழில்: சரஸ்வதி ராம்நாத்

## காசியபன்

# ஷண்முக சுப்பையா கவிதைகள்

மற்ற புதுக் கவிதைகளுக்கும் ஷண்முக சுப்பையாவின் கவிதைகளுக்கும உள்ள முக்கியமான வேற்றுமை, இவருடைய ஓசை நயம், எளிமை, புரியாத்தன்மையின் சுபாவம் இவைதான். இந்த எளிமையை மேல்வாரியாகப் பார்த்துவிட்டு இவர் கவிதையில் என்ன இருக்கிறது என்று சிலர் உதாசீனமாகத் தள்ளி விடுகிருர்கள். பிரபல எழுத்தாளர் ஒருவர்—அவர் பெயரை நான் சொல்ல விருப்பவில்லை—சுப்பையாவின் கவிதை தேசிக விநயகம்பிள்ளையின் கவிதைகள் போல் இருக்கின்றன, பிரமாதப் படுத்தும்படியாக ஒன்றுமில்லை என்று அபிப்பிராயப்பட்டார். சுப்பையாவின் கவிதையைப் போல் வேறு எந்தத் தற்காலக் கவிஞனுடைய கவிதையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப் பட்டு சமீபத்தில் உலகம் முழுதும் வியாபகம் உள்ள சில தொகுப்புகளில் வந்ததில்லை. சில அமெரிக்க பத்திரிகைகளிலும் இவருடைய கவிதைகள் இடம் பெற்றுள்ளன. ஏன்? க.நா.சு., நகுலன் இவர்கள் மொழி பெயர்த்ததாலா? ஜெஸ்ஸவாலாவும் பார்த்தசாரதியும் ஆதரித்ததினுலா? திரு பார்த்தசாரதியிடம் இதைப்பற்றி பேசும் போது அவர் சொன்னது ஞாபகத்திற்கு வருகிறது. சுப்பையாவின் கவிதைகள் மிக எளிதாக இருக்கின்றன. மொழிபெயர்க்க வசதியுடையவையாக இருக்கின்றன. இதெல்லாவற்றிற்கும் மேலாக அடிப்படையாக, கட்டியான அழுத்தமான அனுபவம் தென்படுகின்றது. இப்படி அவர் அபிப்பிராயப் பட்டார். இது உண்மையாகவே இருக்க வேண்டும்.

'கண்ணன் என் தம்பி', 'குருக்ஷேத்திரம்' என்ற புஸ்தகங்களிலும், பல பத்திரிகைகளிலும் இவருடைய கவிதைகள் கிடைக்கின்றன. 'கண்ணன் என் தம்பி'யின் முகவுரையில் நகுலன் சொல்கிருர். ''நண்பர் தன் கவிதைகளைக் குழந்தைக் கவிதைகள் என்று கூற விரும்புகிருர். ஏன் என்று எனக்குத் தெரியவில்லை.''

எனக்கும் தெரியவில்லை. சந்தேகம் இல்லாமல் சுப்பையாவின் கவிதையை அகராதி உரையாசிரியர்கள் உதவியின்றி படித்து புரியவும், ரசிக்கவும் முடியும். இருந்தாலும் எத்தனை குழந்தைகளுக்கு இது முடியும் என்று தெரியவில்லை. பிளேக்கின் கவிதைகளை பள்ளிக்கூடப் பாட புஸ்தகங்களில் பார்க்கிறேம். எத்தனைப் பிள்ளைகளுக்கு அந்தக் கவிதைகளின் முழுபாவமும் தொனிகளும் புரிந்திருக்கின்றன? இதே போல் தான் சுப்பையாவின் கவிதையும். 'காவல்' என்பது மிகவும் எளிமையான கவிதை.

வீட்டைச் சுற்றி
தோட்டம் போட்டேன்.
தோட்டத்தைச் சுற்றி
வேலீ போட்டேன்.
வேலீயைச் சுற்றிக்
காவல் போட்டேன்.
காவலைப் பற்றி
கவலைப் பட்டேன்.

'காவலேப் பற்றிக் கவலேப் பட்டேன்' என்கிறபோது அதற்கு முன் வரும் குறியீடுகளும் படிமங்களும் ஒருதரம் பெற்று எதையெதையோ சுட்டிக் காட்டுகின்றன. இதைப் போல் 'செடி' என்ற கவிதையிலும் 'அது/வெயிலே நோக்கி/தலேயை நீட்டும்/பாட்டை பார்த்தாயா?' என்று கேட்கும்போது வாழ்வதற்காக ஒவ்வொரு உயிரும் படும் பாட்டை, வாழ்வதற்காக உள்ள போரைக் குறிப்பிடுவது போல் தோன்றுகிறது. வெளியிலே வளர்ந்துவிடு / வளர்ந்து விட்டு நிழலேக் கொடுத்துவிடு' என்பதில் உள்ள பாவமும் கவனிக்கத் தக்கது

'நாய்க் காட்சி' சுப்பையாவின் பிரசித்தமான கவிதைகளில் ஒன்று. வருகிற தொகுப்புகளிலெல்லாம் அது இடம் பெறுகிறது.

நாய்க் காட்சி
நானும் பார்த்தேன்.
நன்ரு யிருந்தது
பார்த்து விட்டு
வெளியே வந்தால்
எழவெடுத்த
எச்சில் நாய்க் கூட்டம்.

இதில் இருக்கும் எதிர்ப் பொருளும் ஆசியமும் இவருடைய கவிதைகளேப் படிப்பவர்களே எல்லாம் கவர்ந்திருக்கிறது. அதனுல் தான் பலபேர்கள் இதை மொழி பெயர்த்திருக்கிருர்கள். 'சந்தை' என்ற கவிதையைப் பாருங்கள்.

திங்கள் தோறும்
எங்கள் ஊரில்
சந்தை கூடும்.
சந்தைக்கு
மந்தை மந்தையாய்
மாடுகள்
மக்களுடன்
வந்து சேரும்.
வந்து சேர்ந்தால்
பின்னர்
சந்தை கலேயும் வரை
மாடுகளுக்காய்
மக்களுக்குள்
நடக்கும் பேரம்
ஒரே ஆரவாரம்!

வாழ்க்கைச் சந்தையில் கூட்டம். இதில் 'மந்தை மந்தையாய் / மாடு கள் / மக்களுடன் / வந்து சேரும்' என்பதில் மாடுகளும் மக்களும் ஒன்ருவதைப் பார்க்கிருேம். சந்தை முடியும் வரை இவர்களுடைய ஆரவாரம். 'சந்தை கலேயும் வரை' என்பதினுல் பின் ஏற்படும் மௌனத்தைக் குறிகாட்டப்படுகிறது. மனித வாழ்க்கையின் கசப்பை ஆடம்பரம் ஒன்றும் இல்லாமல் அழுத்தமாகக் காண்பிக்கிருர் சுப்பையா.

தற்கால வாழ்க்கையின் பயனின்மையும் துரிதங்களும் 'குசலம் கேட்டால்' என்ற கவிதையில் மிக அற்புதமாகச் சித்திரம் செய்திருக் கிருர். தற்போதைய நாகரிகத்தின் அவஸ்தை, அதிலும் நடுவகுப்பின

ருடைய—தற்காலத்து பாடகர்களும், புத்திசாலிகளும் தரும் வகுப்பி னுடைய நிலைமையும் இதில் நன்ருகப் பார்க்கலாம்.

"ஓஹோ எனக்கு
எல்லா மாயிற்று
ஆண்டவன் அருளால்
குழந்தைகளும்
இரண்டுண்டு
யார் செய்த புண்ணியமோ
இரண்டும் ஆண்களே
பின் என்ன?
எனக்கு வாதம்
அவளுக்கு காசம்
பாவம்
மூத்தவனுக்கு
ஏதோ பாலாரிஷ்டம்
இளையவனுக்கு
இதுவரைக்கும்
ஒன்றுமில்லை
இனி என்னவோ
எல்லாவற்றிற்கும் மேலாக
நான் ஓர் குமாஸ்தா
என்ன போதுமா
இல்லை இன்னும்
தெரிய வேண்டுமா?"

கடைசியில் வரும் நாலு அடிகள் சாதாரணமாக நம் பேச்சில் வழங்கு வதுதான். ஆனல் இந்தக் கவிதையில் அவை ஒரு தனி கசப்பைக் காட்டவில்லையா? தே. வி. யின் கவிதை போலவா இருக்கிறது?

சுப்பையாவின் கவிதைகளைக் குழந்தைக் கவிதையென்று சொல்ல முடியாது. சில கவிதைகளை வேண்டுமானுல் அப்படிச் சொல்லலாம். 'கண்ணன் என் தம்பி'யில் 'வித்தை' என்ற கவிதை கவனிக்கப் படவேண்டியது.

பூத்துக் குலுக்கும்
மாமரங்களே!
உங்களில் சிலதேன்
காய்த்துக் கனிகள்
ஈவதில்லை!
ஏய்த்துப் பிழைத்திடும்
வித்தை அதுவெனில்
அவைகளை வெட்டி
வீழ்த்திடும் நாள்
வெகு தூரத்திலில்லை.

'சிலதேன் காய்த்துக் கனிகள் ஈவதில்லை' என்பது ஆழமான ஒரு கேள்வி. அதற்கு விடை கவிஞர் கேட்கவில்லை, விரும்பவுமில்லை. மலடுகளை வெட்டி வீழ்த்திடும் நாள் சமீபத்தில் தான் இருக்கிறது என்கிருர். புதுத் தளிர்த் தளிர்க்க, புதுமை படைக்கக் காலம் நெருங்கி

விட்டது என்பது சூசனை குழந்தைகளுக்கு இதெல்லாம் புரியுமா? 'டைகர், டைகர்' போலதான்.

பெரிய விஷயங்களை மிக லாவகமாக சுப்பையாவினால் கையாள முடியும் என்பதற்கு இன்னம் பல கவிதைகளை எடுத்துக் காட்டலாம். கண்ணன் தாலாட்டு, சுடுகாடு, பாதை விதிகள், கண்ணே நீ முதலிய சில கவிதைகள் குறிப்பிடத் தகுந்தன.

சுப்பையாவின் கவிதைகளில் எனக்கு சிலாக்கியம் என்று தோன்றிய சில அடிகளை காண்பித்து விட்டு இந்தக் கட்டுரையை முடித்துக் கொள்கிறேன்.

நீறி நீறி
இருந்த சடலமும்
மாயமாய் மறைந்தது
மெய்ச் சுடுகாடும்
பொய்ச் சுடுகாடு
போய்ச் சேர்ந்தது (சுடுகாடு)

துணைவியின் மெய்யை
தோன்றிய பொழுதெல்லாம்
வருத்தினேன் அன்றி
ஒரு சிறு துரும்பையும் எடுத்து
நகர்த்தினேன் அல்லன் (மெய் வருத்தம்)
அவன் பெரும்

பணப் பெட்டி
நான் வெறும்
தோல் பெட்டி
எல்லாம் ஒரே
மண்ணாங்கட்டி (மண்ணாங்கட்டி)

''நடைப்பிணம் சீச்சீ!
நடமாடித் திரிகின்றான்''
என என்னை
அறிந்தோரும்
நகையாய்
நகைக்கின்றார் (அறிஞர்கள்)

சுப்பையாவின் கவிதைகளில் அபூர்வமான கற்பனைகளோ படிமங்களோ அதிசயம் தருகின்ற அலங்காரங்களோ இல்லை. அடைமொழிகள்கூட அவர் உபயோகிப்பதில்லை என்று சொல்லலாம். இப்படியிருந்தும் அவர் கவிதைகளில் ஒரு சக்தியும் ஆத்மரூபமும் (Personal) காணமுடிகிறது. தமிழ் நாட்டில் வேண்டிய அளவு அவருடைய கவிதைகளை படிக்கவோ, அவற்றின் தன்மைகளை உணரவோ செய்த தாகத் தெரியவில்லை. தற்போது இயங்கும் கவிதை மலர்ச்சி இயக்கத்தில் இது ஒரு குறை என்றே சொல்ல வேண்டும். ●

# வெளிச்சம்

சி. ஆர். ரவீந்திரன்

கரும்புப் பட்டத்திற்குள் தாம்புக்கயிறை விரித்துப் போட்டு விட்டுப் பெருமூச்சு விட்டாள் வள்ளி. கைகாலெல்லாம் இற்றுவிழுந்து விடுகிற மாதிரி ஒரே வலி. மத்தியானத்திலிருந்தே தலையை வலிக்கிற மாதிரியிருந்தது. அடிக்கடி கண்களில் இருட்டுக் கட்டுவது போலிருந்தது. தலை சுற்றிக் கீழே விழுகிறமாதிரி ஒரு தோணல். இருந்தாலும் சமாளித்துக் கொண்டே கரும்புக்கத்தை சுமந்து கொண்டிருந்தாள். தாறுமாறாய்க் கிடந்த கரும்புச் சல்லைகளைப் பார்த்ததும் தெம்பு வந்தது அவளுக்கு. குவியல் ஒரு நடைச் சுமைக்குத்தான் வரும் போலிருந்தது. இடது கையை நெற்றியில் வைத்து மேற்குப் பக்கமாகக் கண்ணுக் கெட்டிய தூரம் வரை பார்த்தாள். பொழுது இறங்கிவிட்டிருந்தது. மலை உச்சிகளில் மேகம் அரிஅரியாகப் படிந்திருந்தது. ஆகாயம் நீலமும் சிவப்பும் மஞ்சளுமாய் பளிச்சென்றிருந்தது. அப்புறம் கரும்பு வெட்டிக் கொண்டிருந்த காளியப்பன் பக்கமாகத் திரும்பினாள். சித்துக் கோடாரி சதக்கென்று பாய்ந்ததும் கையோடுவந்த கரும்புச் சல்லையை இடது பக்கமாக வீசினான் அவன். சரக்கென்றபடி குவியலாய்க் கிடந்த சல்லைகளோடு ஒன்றாய்ப்போய் விழுந்தது அது. கோடாரியைத் திண்டின் மேல் போட்டுவிட்டு முண்டாசை அவிழ்த்து உதறி முகத்தைத் துடைக்கத் தொடங்கினான் அவன். வேலம்மாள் கோந்தாழை நறுக்குகிறாளென்றால் மளமள வென்று காரியம் நடக்குமென்று தெரியும் அவளுக்கு. வேலம்மாள் பண்ணைக்காரனின் வீட்டுக்காரி. ஒரே சுறுசுறுப்பு கொஞ்ச நேரம் சும்மா இருக்கமாட்டாள். அதைச் செய் இதைச்செய் என்று ஒரேயடியாய் எல்லாரையும் விரட்டிக் கொண்டிருப்பாள். மரக்கட்டையில் குந்திக்கொண்டு கரும்புப்பூவை நறுக்கி அப்பால் போட்டுவிட்டு கோந்தாழை நறுக்கிக் கொண்டிருந்தாள் அவள். கையோடு ரண்டு கணுக்கள் வரை கரும்பையும் நறுக்கித் தள்ளினாள். அவைகளைப் பொறுக்கி மூங்கில் கூடையில் போட்டபடி குந்தியிருந்தாள் தெய்வானை. தெய்வானைக்கு பொடிக் கரும்பு வியாபாரம். தினமும் பள்ளிக்கூடத்துப் பக்கம் கொண்டு போவாள். ஒரு நாளைக்குப் போகாவிட்டால் பிள்ளைகள் பிடியோ பிடியென்று பிடித்துக் கொள்வார்களென்று அடிக்கடி பெருமையாகச் சொல்லிக் கொள்வாள். வள்ளி ஆலைக் கொட்டில் பக்கமாய்ப் பார்த்தாள். ஆட்கள் நிறையப் பேர் வேலை செய்து கொண்டிருந்தார்கள். கூரைக்கு மேலே புகை குபுகுபுவென்று போய்க் கொண்டிருந்தது, கரும்பு ஆலை ஓடிக் கொண்டிருந்த சத்தம்

கடகடவென்று கேட்டது. கூலிக்காரிகள் கரும்புக் கத்தைகளைச் சுமந்தபடி வரப்புக்களில் போய்க் கொண்டிருந்தார்கள். ஓடியோடி வேலை செய்கிறதன்னால் இன்றைக்கு அவர்களைப்போல் முடியவில்லை யென்கிற ஏக்கம் வள்ளிக்கு. வலது கையை இடுப்பில் ஊன்றியபடி அவர்கள் போவதையே வெறித்திருந்தாள் அவள்.

''வள்ளிக்கு ஒடம்புக்கு செரியில்லையாட்டா இருக்குது''

குரல் வந்த பக்கமாகத் திரும்பினாள். காளியப்பன் இவளைப் பார்த்தபடியே முண்டாசைத் தலைக்குக் கட்டிக் கொண்டிருந்தான். வள்ளி குனிந்து கரும்புச் சல்லைகளை எடுத்துத் தாம்புக் கயிற்றின்மேல் அடுக்கத் தொடங்கினாள்.

''அவளுக்கென்ன ஒடம்புக்கு. குத்துக் கல்லாட்டா நிக்கரு. புருஷங்காறெ குடிச்சுப் போட்டுக் கிடிச்சுப்போட்டு வந்து ராத்திரி ரவளெ பண்ணீருப்பா. ஏலெ? வள்ளீ! ராத்திரியெதாவுது ரவளெ ரச்சயா?''

''......வள்ளி காதில் வாங்கிக் கொள்ளாததுபோல வேலையில் குறியாயிருந்தாள்.''

''ஏலெ? வள்ளீ! சொல்றது காதுலெ உழுவிலியா?''

வேலம்மாளை ஒருதரம் பார்த்துவிட்டு திரும்பவும் வேலையில் முனைந்தாள் வள்ளி. முகத்தில் கடுகடுப்புத்தெரிந்தது. வேலம்மாளுக்கு சுருக்கென்று பட்டது.

''இவபாடு இப்பவோ பொறவோன்னு. புருஷங்கார கீழேரீலெ வெப்பாட்டி வெச்சிருக்கருனுமா? அவஞ் சம்பாரிச்சுக் கொட்டறதுக்கு ரண்டு பொம்பளீக'' எகத்தாளமாய்ச் சொல்லிவிட்டுச் சிரித்தாள் வேலம்மாள்.

''போதாத காலம். இவ வவுத்துலெ ஒண்ணுகாய்க்க மாட்டீங் குது. ஏலெ வள்ளீ! முழுவாமெக்கிழுவாமெ இருக்கறயா?'' தாம்புக் கயிற்றை இறுக்கி முடிந்து கொண்டிருந்த வள்ளியிடம் கேட்டாள் தெய்வானை.

அவளை ஒருதரம் முறைத்துப் பார்த்துவிட்டு, ''அண்ணு! கொஞ்சந் தூக்கியுடு'' என்றாள் வள்ளி. காளியப்பன் பக்கத்தில் வந்தான். சிம்மாட்டைத் தலையில் வைத்துக் கொண்டு குந்துவது போல உடம்பைக் குறுக்கினாள். இரண்டு கைகளாலும் கரும்புக்கத் தையைப் பிடித்துத் தூக்கி அவளுடைய தலையில் வைத்தான். வைத் தவன் ''பத்தரமாப்போ! காலுகீலு வழுக்கப் போவுது'' என்று சொல் லிக் கொண்டே கோடாரியை எடுக்கப்போனான். அவள் நிமிர்ந்து கிளம்பினாள்.

''ஏந்தெய்வானீம்மா? இவ புருஷங்கிட்ட இருக்கறவளுக்கு ஏதாவுது கொழந்த குஞ்சு இருக்குதா?''

‘‘அவ முண்டச்சங்க. ஆறு [illegible]
போட்டு அப்பனூட்டுக்கே வந்துட்டாளாமா?’’

‘‘அட எளவு கருமமே!’’ வேலம்மாள் அங்கலாய்த்தாள். வரப்பில் நடந்து கொண்டிருந்த வள்ளிக்கு எரிச்சலாயிருந்தது.

‘‘ஊராரு நாயமுன்னு சோறுதண்ணியில்லாமப் பேசுவானுக. இவ ஒக்கிதி தெரியாதா? ஊரே காரித்துப்புது. தோடத்துக்காரனெ வெச்சிட்டு சிலுவாடு சேத்தீட்டு இருக்கரு தேவிடியாமுண்டெ. புருஷனா உட்டுக்குடுத்து வாங்கித் தின்னுகிட்டிருக்கரு. முண்டைக தலையிலெ கல்லெத்தூக்கிப் போட பயந்துக்குவானுகளா. இதுகெல்லாம் பேசுது பத்தினியாட்டா. ஆரச் சொல்ல? இந்த நாசமாப்போனவனுக்குப் புத்திவேணும். தொண்டு தொரும்பெல்லா எளக்காரமாப் பேசுது வரட்டு இன்னக்கி ரண்டுலே ஒண்ணு பாத்துப் போடறெ. ‘‘போறதா இருந்தா அவ கூடவே போயிறு இல்லீன்னு மருவாதியா இங்கெயே கெடன்னு சொல்லீப் போடறே.’’

பொருமிக்கொண்டே நடந்தவள் கழிவு வாய்க்காலில் இறங்கி வரப்பில் நடந்தாள். எதிரில் கூலிக்காரிகள் வந்து கொண்டிருந்தார்கள். நெருங்கிய போது வரப்பை விட்டுக் கீழிறங்கி வழிவிட்டார்கள்.

‘‘யே வள்ளி? கரும்பு தீந்துதா?’’ ஒருத்தி கேட்டாள்.

‘‘இன்னோரு நடைக்கு வரு’’ சொல்லீக் கொண்டே போனாள் வள்ளி. கூலிக்காரிகளில் ஒருத்தி எதையோ சொல்ல மற்றவர்கள் சிரித்துக் கொண்டே நடந்தார்கள்.

‘‘பொண்டுகளுக்கு கும்மாளத்தப்பாரு’’ முனகிவிட்டுப் பெருமூச்சுவிட்டாள்.

‘‘என்ர தலெவிதி இப்பிடி. இவனுக்கு மூலெச்செறெ போட்ட நாள்லெ இருந்து மாரடிக்கறே. நெனச்சுட்டாக்க நாணுக்கலாமான்னு இருக்குது இப்பிடி நாயட்டா அலஞ்சுட்டு போனானா ராத்ரீலெ நிம்மதியாத் தூங்க முடீதா. கள்ளுத்தண்ணியெ குடிச்சுட்டு வந்து அவம் போடற ரவுசு ஏழூருக்குக் கேக்கும் போலிருக்குது. அக்கம்பக்கத்துலெ ஆருந்தூங்க முடீலீன்னு மொனவருங்க. இந்தப் பாழாப் போனவனோடெ எத்தனெ நாளக்கி சின்னப் படறது? சாராயத்தெப் போட்டுட்டு வந்து ஆடறதும் பாடறதும் கருமமேன்னு கண்ணமூடி வெசனமத்தத் தூங்கலாமுன்னு சும்மா உட்ருனா மனுஷியெப்புடிச்சு குஞ்சு குஞ்சுன்னு குஞ்சரு. கடவுளே! எம்பாடு என்னிக்குத் தீருமோ’’ நொந்து கொண்டே நடந்தாள்.

‘‘டேய்! சக்க தீந்து போச்சு. வெறு அடுப்பு எரீது. சீக்கீரமா இழுத்தா’’ சக்கை தள்ளிக் கொண்டிருந்த மாடன் கத்திக் கொண்டிருந்தான்.

கமகமவென்று கரும்புப்பாகு மணந்தது. பாவுபதமாகி விட்டதாக நினைக்கத் தோன்றியது வள்ளிக்கு. ஆலைக்குப் பக்கத்திலிருந்த

குவியலில் தொப்பென்று சுமையைப் போட்டு தாம்புக்கயிறை உருவிச் சுருட்டினுள்

நாலு கொப்பரைக்கான கரும்பு ஆலைக்குப் பக்கத்தில் குவிந்து கிடந்தது. ஆலைக்குக் கரும்பு கொடுத்துக் கொண்டிருந்தான் மொன்னே. குனிந்தும் நிமிர்ந்தும் கரும்பு கொடுப்பதில் இருக்கிற சிரமம் வள்ளிக்குத் தெரியும். இடுப்புப் பிடித்துக் கொண்டு வலியாய் வலிக்கும். அக்கம் பக்கம் சட்டென்று திரும்ப முடியாது. போதாத தற்கு மொன்னே வலது காலில் கட்டுப் போட்டிருந்தான். புண்ணி லிருந்து வழிந்த சீயும். ரத்தமும் கட்டுத்துணியை நனைத்திருந்தன. ஈக்கள் புண்ணை மொய்த்ததால் அடிக்கடி காலை உதறிக் கொண்டு போய் காயப் போட்டான். மாரியும் வேலனும் காய்ந்த சக்கைகளைக் கொப்பரைப் பக்கமாய் இழுத்துக் கொண்டு போனுர்கள். பாகைப் பதம் பிடிக்க துடுப்பைக் கொப்பரைக்குள் அலசிக் கொண்டிருந்தான் ரங்கன். பழனியும், சோமனும் அச்சுப் பலகைகளுக்குத் தண்ணீர் தெளித்துக் கொண்டிருந்தார்கள்.

''ஏக்கா கரும்பு தீந்துபோச்சா?'' மொன்னே இவள் பக்கமாகத் திரும்பிக் கேட்டான்.

''இல்லெ இன்னேரு நடைக்கு வரும்''

மளமளவென்று நடக்கத் தொடங்கினுள் வள்ளி. கால்கள் பின்னின. பின் கொசுவம் வைத்துக் காப்பிக் கொட்டைக் கலரில் நெகமம் சேலைகட்டியிருந்தாள். அழுக்குக் கறையேறிய சேலை. இடது கையில் தாயத்துக் கட்டியிருந்தாள். அதன் பக்கங்களில் சதை பிதுங்கியிருந்தது. வரப்பைத் தாண்டுகையில் வலது கால் பெருவிரல் இடது கால் குதியில் மோதிக் கொண்டது.

''நாலு நாளக்கி ஊட்லெ இருக்கலாம்னு முடீதா. இந்த நொறுங்கி வந்தவனுக்கு கழுத்தெ நீட்ன நாள்லெ இருந்து நாயிபடாத பாடு. சோத்துக்குக் குடுக்கருனு? சாத்துக்குக் குடுக்கருனு? நோம்பி நொடீன்னு துணிமணி எடுத்துக் குடுக்கருனு? கண்ணாலமான புதுசு லெயாவுது பழசோ பரட்டயோ வாங்கீட்டுவந்து குடுத்துட்டு கொஞ் சுவா. இப்ப அவ வயிறு வெடிக்கக் குடிக்கறதுக்கே பத்தமாட்டிங் குது. ஆராரோ சொல்லீங் கேக்காம இவந்தலெலெ புடிச்சு கட்டி வெச்சா எங்காத்தா. அப்பன் எத்தனையோ சொல்லி ஒத்தக்கால்லெ நின்னுளே சண்டாளி. என்ர அண்ணம் பையனுக்குத்தாங் குடுக்கோ ணும்னுளே''.

''லே வள்ளீ! கரும்பு தீந்து போச்சு அப்படியே நட.'' தெம்பு டன் திரும்பி நடந்தாள் வள்ளி.

தாம்புக் கயிற்றையும் துண்டுச் சேலையையும் ஆலைக் கொட்டி லுக்குப் பக்கத்திலிருந்த கூரைச் சாலைக்குள் வைத்துவிட்டு சிமெண் டுத் தொட்டிப் பக்கம் போனுள். கணுக்கால்வரை சேலையை உயர்த்தி வலது பக்க இடுப்பில் செருகிக் கொண்டாள். தொட்டித் தண்ணீரைப்

பார்த்தாள். கலங்கலாயிருந்த தண்ணீருக்குள் பச்சைப் பசேலென்று பாசி தெரிந்தது. தன்னுடைய முகத்தை மங்கலாகக் காட்டியது தண்ணீர். மூக்கும் முழியுமாய்க் கச்சிதமாய் இருந்த தன்னுடைய முகத்தைப் பார்க்கப் பெருமையாயிருந்தது வள்ளிக்கு.

''எனக்கென்ன? ராசாத்தி மாதிரி இருக்கறே! மூஞ்சி சினிமாக்காரியாட்டா. இல்லீன்னு அந்த ஆளு என்னெ மத்தியானம் அப்பிடிம் பாப்பானு. நெறந்தா கருப்படிச்ச மாதிரி. நல்ல எடத்துலெ பொறந்து நானூ நாலு எழுத்துப் படிச்சிருந்தா இப்ப இப்பிடிச் சின்னப்படுவனு? அவன் என்னமாப் பார்த்தான். ஒருக்காப் பாக்கறப்போ மொறக்கருமாதிரி. துருதுருன்னு ஒடம்பெல்லா என்னமோ அரிக்கரு மாதிரி. இன்னொருக்காப் பாக்கறப்போ 'வரமாட்டியான்னு' கெஞ்சரு மாதிரி இருந்துது. அப்பறம் பாத்தா அப்பிடியே பாஞ்சுவந்து கட்டிப் புடிக்கறவனுட்டா இருந்துது. சும்மா சும்மா பாத்துக்கிட்டே இருந்தானே. அவனுக்கென்ன ராசாவாட்டா மூஞ்சி. வெள்ளக் கவுச்சா. வெள்ளெ வேஷ்டி. சோஷீரு ஊட்டுத் திண்ணையிலெ உக்காந்துட்டு இருந்தானே. ஒன்னமும் சோஷியம் பாத்துட்டு இருப்பானே என்னமோ? கடக்காரி கண்டுகிட்டிருப்பா. அஹ்... ஹா... ஆரு பத்தினி? அந்த நேரம் பாத்து தலெகிலெ சீவாமெ பரட்டையா இருந்தே. ஒரு ஆம்பளெ முன்னுலெ இப்பிடியான்னு மருதாயி ஊட்டெ போயி தண்ணியெ அள்ளித் தேச்சு சீப்பெ வாங்கி தலெ சீவிட்டு கட முன்னுலெ வந்து உக்காந்தெ.''

''லே! தொட்டீலே என்னத்தப் போட்டெ. காசுகீசு கெடக்குதா?''

''ஒண்ணுமில்லே மீனுக்குஞ்சு நீந்துது.'' சமாளித்த வள்ளிக்குக் கொஞ்சம் எரிச்சல். தண்ணீரை அள்ளி முகம் கைகாலெல்லாம் கழுவினுள். முந்தானைச் சேலையால் ஈரத்தைத் துடைத்தாள். மற்றவர்கள் தொட்டியைச் சுற்றி நின்று கொண்டு கழுவத் தொடங்கினுர்கள். செருகியிருந்த சேலையை அவிழ்த்துச் சரி செய்து கொண்டு ஆலையில் சக்கை வெளிவருதைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''இன்னம் அவன் இருப்பானு? கண்ணுத்தா வந்து கூட்டிகிட்டு வந்துட்டா. அவளெ முன்னுலெ விட்டு பின்னுலே நடந்தப்போ நாலஞ்சு வெசக்கா திரும்பித் திரும்பிப் பாத்தே. அவன் என்னெயே பார்த்துட்டு இருந்தானே! 'ஐயோ! பாவி போறயான்னு' கொஞ்சரு மாதிரி இருந்துதே. அப்பிடியே அவங்கிட்டப் போயிடலாமான்னு இருந்தது. கண்ணுலமாயி எத்தனெ நாளாவுது. ஒரு நாளாவுது அப்பிடிப் பாத்திருப்பானு இந்தப் பாழாப் போனவே. வாலே போலேன்னு வல்லுவல்லுன்னு வருவானே.''

''லே அங்கென்ன பாக்கற அசிதீமா. பயித்தியங் கியித்தியம் புடிச்சுட்டுதா.''

''எனக்கென்னலே வந்துது பயித்தியம் புடிக்க''

எல்லாருமாய்க் கிளம்பினுர்கள். ஒவ்வொருத்தியும் கைக்கரும்பு எடுத்துக் கொண்டார்கள். வேலை முடிந்த தெம்பில் கலகலவென்று பேசிக் கொண்டே நடந்தார்கள்.

வாய்க்கால் மேட்டில் இறங்கியபோது மாலை மயங்கிவிட்டது. சிலுசிலுவென்று வாய்க்காலில் தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது. கிச்சாம்பட்டையில் கரும்பை இடுக்கிக் கொண்டாள் வள்ளி. தொடைப் பக்கங்களில் கைகளைப் போட்டு சேலையைக் கணுக்கால் வரைக்கும் உயர்த்திக் கொண்டு தண்ணீரில் இறங்கி நடந்தார்கள் நடக்கையில் சலக் சலக் கென்று சப்தமிட்டது தண்ணீர்.

மறுபக்க மேட்டில் ரொம்ப தூரம் வரை குடிசைகளிருந்தன. புதுப்படம் போட்டதும் கொட்டகை முன்னுல் கூடுகிற கூட்டம் மாதிரி அவைகள் தாறுமாருய் இடித்துக் கொட்டிருந்தன. மேட்டுக்கு வந்ததும் கூலிக்காரிகள் பிரிந்தனர். நேராகப் பெட்டிக் கடைக்குப் போனுள் வள்ளி. கைக்கரும்பைக் கொடுத்துவிட்டு பொரிச்ச கடலையும், பச்சை மிளகாயும் வாங்கிக் கொண்டு குடிசைக்குத் திரும்பினுள். சோஷியர் வீட்டுத் திண்ணை வெறிச்சோடிக்கிடந்தது. ஒரு பெட்டைக் கோழியைத் துரத்திக் கொண்டு குறுக்கே ஓடியது சேவல். சின்னப் பையன்கள் ஓவென்று கத்திக் கொண்டே குதித்தார்கள். கிலுகிலுவென்றிருந்தது வள்ளிக்கு.

படலையைத் திறந்து கொண்டு வள்ளி உள்ளே நுழையவும் மூலையில் கட்டப்பட்டிருந்த கட்டுச் சேவல் படபடவென்று சிறகடித்துவிட்டுக் கூவியது.

"பொழக்கற பொழப்புக்கு சாவக்கட்டு வேறெ. நொறுங்கி வந்தவன! என்ன பண்ணேனுந் தெரீமா... அப்பிடியே..."

குடிசைக்குள் நுழைந்து தகர விளக்கைப் பற்ற வைத்தாள். மண் சொப்பிலிருந்த வெள்ளைச் சோளத்தை அள்ளிக் கொண்டு ஈயத் தம்ளரில் பானைத் தண்ணீரை முகந்துகொண்டு வெளியே வந்தாள். வந்தவள் சேவலுக்குப் பக்கத்திலிருந்த மரத் தொட்டியில் சோளத்தைப் போட்டுத் தண்ணீரை ஊற்றினுள். சேவல் சோளத்தை விழுங்கியது. கொஞ்ச நேரம்வரை பார்த்துக் கொண்டிருந்தாள்.

கூரை மேலிருந்த சுள்ளிகளை எடுத்துப்போய் அடுப்பு மூட்டி வெல்லத் தண்ணீர் வடித்து ஊதி ஊதிக் குடித்தாள். அப்புறம் உலை வைத்துக் கஞ்சி காய்ச்சினுள். தொட்டுக்கொள்ளத் துவையல் அரைத்தாள்.

மனதில் அவனைப் பற்றிய நினைவே நிழலாடிக்கொண்டிருந்தது. அவன் தன்னுடைய கண்ணுக்குள் உறுத்திக் கொண்டிருப்பதாய் ஒரு உணர்வு அவளுக்கு. இன்னெருதரம் அவனைப் பார்க்க முடியுமா

என்று யோசித்தவள் பெருமூச்சு விட்டாள். புருஷனை நினைக்க எரிச்சல் பிய்த்துக் கொண்டு வந்தது. அடிக்கடி கருவிக்கொண்டே இருந்தாள்.

நாலு தம்ளர் கஞ்சியைத் துவையலோடு விழுங்கிவிட்டு கூரை யிடுக்கில் செருகியிருந்த பாயை எடுத்து உதறி விரித்தாள். ஓரத்தில் கிடந்த பழைய துணி மூட்டையை எடுத்துத் தலைக்கு வைத்துக் கொண்டு படுத்தாள். தூக்கம் வரவில்லை. தகர விளக்கை அணைத்து விட்டுப் படுத்தாள்.

“பாழாப் போனவனெ இன்னுங் காணமே. அவ ஏதோ மாய மந்தரம் பண்ணி வெச்சிருக்கரு. இல்லீன்னு அவன் இப்படி அவ ளேன்னு கெடப்பானு? கருப்பராயங் கோயிலுக்குப் போயி சாமி கேக்கோணும். எதாவது முறுவாடு பண்ணோணும். எங்கெ கெடக்க ருனே? ஆரோட ரவளெ ரச்செ பண்ணருமோ?”

மட்டைக் கொட்டகையில் முதலாட்டம் முடிந்து ரேடியோ பாடத் தொடங்கியது. கேட்டுக் கொண்டிருந்தவள் இலேசாகக் கண் ணசந்தாள்.

வல்வல்லென்று நாய்கள் குரைப்பதைக் கேட்டு திடுக்கென்று விழித்தாள்.

“ஊடுவரை ஒரவு... வீதிவரை மனைவீ...
காடுவரை பிள்ளய்... கடைசிவரை யாரோ...”

அது புருஷன்தானென்பதை உணர முடிந்தது வள்ளிக்கு.

“பாட்டு வேறெ பாடீட்டு வர்ருனு நாசமாப் போனவெ. அக்கம் பக்கத்துலெ தூங்கறவியெல்லா முழிச்சுக்குவாங்கண்ணு ஆவ அர்த்த மிருந்தா இப்பிடிக் கந்துவானு? வரட்டுப் பேசிக்கறே. ரண்டுலெ ஒண்ணு கேட்டுப் போடறே. அவனுக்காச்சு. இல்லெ எனக்காச்சு. மொவத்துலெயே முழிக்காதின்னு காரித்துப்பிப் போடறே.”

படலை திறக்கப்படும் சத்தம் கேட்டது. கோபம் பிய்த்துக் கொண்டு வந்தது வள்ளிக்கு. குடிசைக்குள் நுழைந்தவன் வாயிலில் நின்றபடியே உள்ளுக்குப் பார்த்துக் கொண்டு நின்றுன். கையிலிருந்த பீடித்தணல் பளிச்சென்று தெரிந்தது.

‘லே வள்ளீ!” அதட்டிவிட்டு பீடியை உறிஞ்சி ஊதினுன் அவன். தூங்குவதுபோல படுத்துக் கிடந்தாள் வள்ளி. அவன் நாலஞ்சுதரம் அதட்டினுன்.

“சாமப் படையிலெ சும்மா கத்தாதெ. தின்னுபோட்டு மொடக்கு. இல்லீனு மான மருவாதியெல்லாங் கெட்டுப் போவு.”

‘‘செர்த்தா எந்திரீலே. அதியாரம் பண்ரு அதியாரம். சோத்தப் போடு பசிக்குது.’’

‘‘போன பக்கம் பசிக்கலியா? நிய்யே போட்டுத் தின்னுபோட்டு மொடக்கு.’’

‘‘ஏலெ? நீ தின்னுட்டியா?’’

‘‘நாந்தின்னு பாழாப் போறெ. ஆராருக்கோ வருது. நமக்கெங்க? எல்லா அனுபவிக்கோணும்னு எழுதிருக்குது.’’

‘‘ம்...’’ அவன் பெருமூச்சு விட்டுக் கொண்டே இருட்டில் கிடந்த பாயை எடுத்துப் போட்டு மல்லாந்து படுத்தான்.

நேரம் கழிந்து கொண்டிருந்தது. வள்ளி மௌனமாக விழித்துக் கிடந்தாள் சேவல் படபடவென்று சிறகடித்து முறுவியது.

‘‘மாமாவ்’’ அவனைக் கூப்பிட்டாள் வள்ளி.

‘‘..........’’

‘‘மாமோவ்’’ குரல் கனமாகியது.

‘‘உம்...’’

‘‘தூங்கீட்டியா?’’

‘‘இல்லெ’’

‘‘திங்கலியா?’’

‘‘இல்லெ’’

‘ய்யே?’’

‘‘பசிக்கலெ’’

‘‘ப்சிக்குதின்னே? எந்திருச்சுக் கையெக் கழுவு. பசியோட கெடந்தா ஒடம்பு என்னத்துக் காவறது.’’

அவள் படுக்கையை விட்டு எழுந்து அடுப்புப் பக்கம் போனுள். இருட்டில் நிரடி திப்பெட்டியை எடுத்து தகர விளக்கைப் பற்ற வைத்தாள்.

அவன் எழுந்து ஈயச் சொம்பில் பானைத் தண்ணீரை முகந்து கொண்டு வாசலுக்குப் போனுன். ✶

சா. கந்தசாமி

# பிரியும் இழைகள்

வேம்பு வண்டியிலிருந்து இறங்கி பெல்ட்டைத் தளர்த்திக்கொண்டு சுற்றும் முற்றும் பார்த்தார். சாலை வெறுமையாக இருந்தது. ஒரு கடுதாசு போட்டிருக்கலாம் என்று இப்போது தோன்றியது. லுங்கியை மடித்துக் கட்டியபடி பெரிதாகக் கனைத்து, ''பெட்டியை எடுத்தா'' என்று வண்டிக்காரனிடம் சொல்லிவிட்டுப் படி ஏறி சின்ன வீட்டிற்குள் நுழைந்தார்.

வாசலில் வண்டியைக் கண்டு வெளியே வந்த பாப்பா திடுதிப்பென்று உள்ளே வரும் மனிதனைக் கண்டு அச்சமுற்று ஒதுங்கினாள். அவனைக் கண்டதும் வேம்பு லுங்கியை அவிழ்த்து விட்டு, ''வேணு எங்கே?'' என்றார்.

கனமான வேம்புவின் குரல் அவளுக்கு இன்னும் பயமூட்டியது. எங்கோ பார்த்தபடி, ''ஆரக் கேட்கிறீங்க?'' என்றாள்.

''—வேணு—இது அவன் வீடுதானே'' என்ற வேம்பு ஓரடி முன்னே வந்து சிரித்தபடி, ''நீ அவன் பெண்டாட்டிதானே?'' என்று கேட்டார்.

''நீங்க யாருன்னு தெரியலியே''

வேம்பு பெரிதாக நகைத்துச் சொன்னார். ''வேணு பயலுக்கு அப்பன்னு ஒருத்தன் இருந்தானே—சிங்கப்பூருக்கு ஓடிப்போனவன்—அவன்தான்—இவன்''

பாப்பா வேம்புவை நிமிர்ந்து பார்த்தாள். ஆச்சரியத்தாலும்—சந்தோஷத்தாலும் என்ன செய்வதென்று ஒரு கணம் தெரியவில்லை. அப்புறம் சமாளித்து, பரபரக்க உள்ளே சென்று பாயை எடுத்து வந்து விரித்து, ''குந்துங்க மாமா'' என்றாள்.

''இருக்கட்டும் இருக்கட்டும்'' என்ற வேம்புவின் பார்வை பாப்பாவைத் தாண்டி சுவரில் பாய்ந்தது. சுவரில் சின்னதாக ஒரு போட்டோ, பெரிய மீசையோடு. சிங்கப்பூருக்குப் போன புதிதில் எடுத்தது. அதைப் பார்த்து அடங்காத சிரிப்பு வந்தது. சிரித்தபடியே அவள் பக்கம் திரும்பினார்.

''போட்டோ பார்த்துப் பார்த்து பழக்கமானதாலேதாங்க மாமா சட்டுன்னு அடையாளம் கண்டுக்க முடிஞ்சிச்சு''

''இல்லாட்டா வெளியே தூரத்தி இருப்பே''

"திடுதிப்னு உள்ளே வந்ததும் யாரோ எவரோன்னு பயந்துட்டேங்க மாமா"

"நிஜமாவா" என்று வேம்பு வாசல் பக்கம் வந்தார்.

வண்டிக்கார அல்லாபிச்சை பெட்டியைத் தூக்க முடியாமல் தவித்தபடி இருந்தான். இவர் படியிறங்கி அவன் அருகில் சென்று தோள்மீது கை வைத்து, "ரொம்ப கனக்குதா" என்றார்.

"அசைக்க முடியலீங்க"

"செத்தஇப்படிவா" வேம்பு அவன் கையைப்பிடித்து பின்னால் இழுத்துவிட்டுப் பெட்டியைத் தூக்கித்தோளில் வைத்துக் கொண் டார்.

"அனுசயமா—புல்லுக் கட்டுக் கணக்காத் தூக்கிட்டீங்களே"

வேம்பு பெட்டியை இறக்கிக் கீழே வைத்தார். பார்வை திடீ ரென்று பாப்பா பக்கம் திரும்பியது. அவரையே பார்த்துக் கொண் டிருந்த பாப்பாவின் பார்வை மரத்தின்மேல் சென்றது. அதைக் கவ னிக்காதது போல வேம்பு வண்டிக்காரனிடம் ஊர் பேரெல்லாம் விசாரித்தார்.

அவன் சொன்னதை யெல்லாம் கேட்டுவிட்டு, "கனக்குதுன்னு நின்னுட்டா போதுமா. இப்பகூட, ஓடுற உன் வண்டிய நிக்க வைப் பேன்" என்றார்.

"உங்களால முடியாததுங்களா"

"வேலையில இல்லாட்டாலும், வாய் நல்லா இருக்கு"

"பொளப்புன்னு ஒண்ணு இருக்குதுங்களே"

"ஒரு பெட்டியைத் தூக்காததுக்காக உனக்கு ரெண்டணா கொறச்சுத் தரணும். நம்ப காஜா மொகைதீன் பையன்னு சொல்லுற. அவரு ரொம்ப வேண்டியவரு. அதுக்காக ரெண்டணா சேத்துத் தரேன்"

வண்டிக்காரனுக்கு இவர் செயல் வியப்பளித்தது. காசை வாங்கி மடியில் செருகிக்கொண்டு ஒரு சலாம் போட்டு விட்டு வண்டி யைத் திருப்பி ஓட்டினான். அவன் போனதும் வேம்பு பெட்டியைத் தூக்கி வந்து உள்ளே வைத்தார். கொஞ்ச நேரம் அதன் மேலே உட்கார்ந்தபடி வீட்டை பார்வையாலேயே அளந்தார். அப்புறம் திடீ ரென்று மகனைக் காணும் ஆவலில் எழுந்து வாசல் பக்கம் வந்தார்.

"நீங்க குந்துங்க மாமா, இப்ப வந்துடுவாங்க"

"இம்மா நேரம் வயல்ல என்ன பண்ணுறான்"

"எருவுக்கு வண்டி பாக்கணும்ன்னு சொல்லிக்கிட்டு இருந் தாங்க"

சாலையையே பார்த்துக் கொண்டிருந்த வேம்பு சட்டென்று திரும்பி, "உனக்கு எப்பக் கல்யாணம் ஆச்சு" என்றார்.

"இந்த ஆனி வந்தா ரெண்டு வருஷம் முடியப் போவுதுங்க மாமா"

"வந்துச்சு, வந்துச்சு. அப்பவே பொறப்பட்டு வரணும்ன்னு பார்த்தேன். முடியல"

"ஆளும் வராம—கடுதாசியும் இல்லாமபோவ நாங்க என்னமோ ஏதோன்னு ரொம்ப பயந்துட்டோங்க மாமா"

"செத்த இடத்துல புல்லும் முளச்சுப் போயிருக்கும்னு நெனெச்சிட்டீங்களா"

"அது இல்லீங்க மாமா"

"என்ன இல்ல" வாசலில் நிற்கச் சலிப்புற்றதுபோல உள்ளே வந்த வேம்பு பெட்டியைத் திறந்து, 'பாப்பா இந்தா இதெப் பாரு" என்று ஐந்தாறு புடவைகளை எடுத்து அவளிடம் கொடுத்தார்.

"மாமா, எல்லாம் எனக்குங்களா?"

'பின்ன. ஒரு பயலப் பெத்து போட்டிருக்கேனே. அவனுக்குக் கலியாணமும் ஆயிடுச்சு. மருமவளும் வீட்டுக்கு வந்துட்டப்புறம், கையை வீசிக்கிட்டு சும்மா வந்து நிக்க முடியுமா?"

பாப்பா பதிலொன்றும் சொல்லாமல் புடவைகளை மார்போடு அணைத்தபடி அவரையே பார்த்துக் கொண்டு இருந்தாள். கண்ணாடி, பீங்கான்கள், வளையல்கள், பாதகிரங்கள், துணிகள் என்று நாலாவிதமான பொருள்களையும் வேம்பு எடுத்துப் பரப்பினார். அத்தனையும் தனக்கு என்கையில் கிளர்ச்சியுற்றாள் கணவன் நினைவு வந்தது. 'எங்க ஊர் சுத்துதோ'. தூரத்தில் அவன் வருவது தெரிந்தது. அடங்காத களிப்போடு உள்ளே ஓடி வந்து, "மாமா, அவுங்க வராங்க?" என்றாள்.

பெட்டிமீது கால்போட்டு உட்கார்ந்து சுருட்டு பற்ற வைத்துக் கொண்டிருந்த வேம்பு திக்குச்சியை இவள்மீது வீசி, "எவுங்க?" என்றார்.

ஒரு கணம் தவித்த பாப்பா, கண்களை உருட்டி வெடுக்கென்று சொன்னாள்: "உங்க மவன்"

புகையை நன்றாக ஊதியபடி, "பெரிய ராசா வரார். ஆட்டத் தூக்கி வாசல்ல வை; வாசலத் தூக்கி ஆட்டுல வை"

அவளுக்கு எரிச்சல் மூண்டது, 'சரியான பிசாசாகத்தான் இருக்கணும்—' என்று முணுமுணுத்துக் கொண்டு தெருப் பக்கம் நடக்க ஆரம்பித்தாள்.

"கோவுச்சுக்கிட்டியா, பாப்பா" வேம்பு எழுந்து வந்து அவள் தோளில் கை வைத்தார். அவள் மருண்டு பின்னுக்கு ஒதுங்கினாள். ஆனால் அவரோ அதைப் பொருட்படுத்தாமல் புகையை ஊதியபடி வாசல் பக்கம் நடந்தார்.

வேணு செருப்பைக் கழட்டிப் போட்டுக் கொண்டிருந்தான்.

''வாங்க ராசா, வாங்க''

வேணு நிமிர்ந்து பார்த்தான். நினைவு வந்தது.

''வாங்க அப்பா''

''அடெ, பயலே, உனக்கு ஞாபகம் இத்துப் போவுலடா''

அவன் பதிலொன்றும் சொல்லாமல் தகப்பனுரையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''ஞாவகம் இல்லாம திருதிருன்னு முழிச்சுக்கிட்டு நிப்பேன்னு நெனெச்சிக்கிட்டு இருந்தேன். அதனுலே நல்லா ஏமாந்துட்டேன்''

அவன் ஆனந்த முற்றதுபோல முறுவலித்து, ''எப்பப்பா வந்திங்க?'' என்றுன்.

''—இப்பதான். செத்த முந்தி''

''வாசல்ல வச்சுதான் பேசிக்கணுமா?'' என்றுள் பாப்பா கணவனிடம்.

''கோவிச்சிக்காத அம்மா'' என்று வேம்பு அவள் பின்னுேடே உள்ளே வந்தார்.

வேணுவுக்கு எட்டு வயதாகும்போது, வேம்பு கப்பல் ஏறினுர். கப்பல் ஏறவே மனமில்லை. பையனும்—மனைவியும் மனத்தில் நிறைந்திருந்தார்கள். ஒரு வருஷம் போல இருவர் நினைவும் மிகவும் வருத்தியது. சம்பாதித்து நிறைய அனுப்பினுர். ஆனுல் ரொம்ப நாட்களுக்கு அது நீடிக்கவில்லை. இன்னெரு பெண்ணுேடு வாழ்வு இணைந்தது; செலவு கூடியது. அடுத்த மாசம் பணம் அனுப்பலாம் என்று ஒரு மாசம் தள்ளிப் போட்டார். அடுத்த மாசம் அடுத்த மாசமென்று தள்ளித் தள்ளி போயிற்று. அப்படி ஆகுமென்று நினைக்கவில்லை. ஆனுல் ஆகிவிட்டது. கொஞ்ச நாட்களுக்குப் பிறகு மனைவி இறந்துவிட்டதாக ஒரு கடிதம் வந்தது. தானே அவளைக் கொலை செய்துவிட்டதாக வருந்தினுர். ஊருக்குச் சென்று மகனைப் பார்க்க வேண்டுமென்று நினைத்தார். அந்த நினைப்பும் மனத்தில் வெகு நாட்களுக்குக் கால் கொள்ளவில்லை. விரைவிலேயே தனக்கொரு மகன் இருப்பது கூட அவருக்கு மறந்துவிட்டது.

பதினைந்து பதினுறு வருஷங்களுக்குப் பிறகு எங்கெல்லாமோ சென்றுவிட்டு வந்த ஒரு கலியாண பத்திரிகை—கலியாணம் நடந்த ஒரு மாதத்திற்குப் பிறகு அவர் கைக்குக் கிடைத்தது. மகனின் திருமணம் சந்தோஷத்தையும் வருத்தத்தையும் அளித்தது. தான் முன் நின்று நடத்த வேண்டிய காரியத்தை யாரோ நடத்தியது அவரை வேதனையுற வைத்தது. அவன் யாருமற்றவன் அல்ல—அவன் தகப்பனுர் உயிரோடு இருக்கிருன் என்பதை உலகறியச் செய்ய வேண்டுமென்ற வேட்கை மனததில் நிறைந்தது. அவசர அவசரமாகப் பிரயாண ஏற்பாடுகளைச் செய்தார். வருஷம் போல தள்ளிப் போயிற்று. யுத்தத்திற்குப் பிறகு கிடைத்த கப்பலில் அதிர்ஷ்டவசமாக அவருக்கு இடம் கிடைத்தது. கப்பலில் அனுபவித்த கஷ்டமெல்லாம் மகனையும்—மருமகளையும் பார்த்ததும் ஒரு பொருட்டாகவே தெரியவில்லை. தான் ரொம்பவும் சந்தோஷமாக இருப்பதாக நினைத்தார்.

சாப்பிடும்போது மகனைக் கேட்டார்: ''சாயந்தரம் உனக்கு ஒண்ணும் வேலெ இல்லிய?''

''ஒண்ணும் இல்லீங்க அப்பா''

''அப்ப, உன் மாமன் வீடு வரைக்கும் போயிட்டு வரலாம்''

''சரிங்க அப்பா''

''பாப்பா நீயும் வா''

''நான் எதுக்குங்க மாமா''

சோற்றுக் கையை உதறினர். குரல் திடீரென்று உயர்ந்தது. ''புறப்படுன்னு. எதுக்குன்னு கேக்கற?''

பாப்பா சப்தத்தில் அதிர்ந்து போனுள். அவளுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை பார்வை வேணு பக்கம் சென்றது. அவனே குனிந்த தலை நிமிராமல் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். கண்களில் திரண்ட கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

வேர்பு சாப்பிட்டெழுந்ததும், ''பாப்பா செத்த பாய எடுத்துப் போடு. ஒரு தூக்கம் போடலாம்'' என்ருர்.

அவள் அவசரம் அவசரமாகப் பாயை எடுத்துவந்து விரித்தாள். வேணு—வண்டி பாத்துக்கிட்டு வரேன் என்று வெளியே சென்ருன். பாப்பா வீட்டு வேலைகளை முடித்துவிட்டு—மாலையில் என்ன புடவை உடுத்திக்கொண்டு போகலாமென்று யோசிக்கலானுள்.

வேர்பு கொடுத்த ஒவ்வொரு புடவையையும் இடுப்பில் சுற்றி உருவிப் போட்டாள் ஒவ்வொன்றும் நன்ருக இருப்பது போலவும்—அதே நேரத்தில் நன்ருக இல்லாதது போலவும் இருந்தது கடைசியாக நீலப் புடவையை அரை மனத்தோடு கட்டிக் கொண்டாள்.

தரையில் புரண்ட பட்டு வேட்டியை சற்றே உயர்த்திக் கட்டிக் கொண்டு வேம்பு, இவளைப் பார்த்து, ''என்ன இன்னும் புறப்படலீயா?'' என்ருர்.

''புறப்பட்டாச்சுங்க மாமா''

அவர் பார்வை இவள்மீது ஏறி இறங்கியது. மனத்தில் சந்தோஷம் பொங்க, ''புடவை உனக்கு ரொம்ப நல்லா இருக்கும்மா எடுக்கச்ச பயந்துகிட்டே இருந்தேன் எப்படி இருக்குமோ—என்னமோன்னு. இப்பப் பார்த்தா உனக்குன்னே நெஞ்சது போல இருக்கு''

பாப்பா முறுவலித்தாள்.

''புடிச்சு இருக்கா பாப்பா''

''ரொம்பங்க மாமா''

"உங்க அத்தை ஒரு வாட்டிக்கூட நான் எடுத்துக் கொடுத்த புடவை புடுச்சு இருக்குன்னு சொன்னதில்ல"

அவள் பெரிதாகச் சிரித்தாள்.

வாசலில் வண்டி வந்து நிற்கும் சப்தம் கேட்டது.

"பய வந்துட்டான் போல இருக்கு"

இவள் எட்டிப் பார்த்து, "ஆமாங்க மாமா" என்றாள்.

"பாப்பா, பச்சைப் பெட்டியை எடுத்துக்கிட்டு வா" அவர் படி இறங்கி வண்டியருகில் சென்றார்.

வேணு வண்டியிலிருந்து கீழே இறங்கினான்.

பாப்பா பச்சைப் பெட்டியோடு வந்தாள்.

"இங்க கொடு அம்மா"

பாப்பா வண்டியில் ஏறி உட்கார்ந்ததும், பெட்டியை அவள் அருகில் வைத்து விட்டு, வேணு பக்கம் வந்தார் வேம்பு.

"நீங்க குந்துங்க அப்பா"

அவர் பெரிதாகச் சிரித்து, "எலே, ரொம்ப நல்லா இருக்கு நீ சொல்லுறது" என்று அவன் கையிலிருந்த தார்க்குச்சை வெடுக்கென்று பறித்துக் கொண்டு தாவி வண்டியின் முன்னே உட்கார்ந்தார். வேணு தயங்கியபடி வண்டியில் ஏறி பாப்பா பக்கத்தில் அமர்ந்தான்.

"உங்க அதிகாரமெல்லாம் இங்கதான்"

அவன் இவள் பெருந்தொடையில் கை வைத்து அழுத்தினான். அவள் சிணுங்கி சப்தமில்லாது சிரித்தாள். வண்டி ஆற்றில் இறங்கி ஏறியது.

ஊருக்குச் சென்று வந்த பிறகு மகனுக்கு சொந்தமாக ஒரு வீடு கட்டி வைக்க வேண்டுமென்று வேம்புக்குத் தோன்றியது. செலவு பற்றி யோசித்தார். மூவாயிரம் என்று தெரிய வந்தது. கையில் நாலுக்கு மேலே இருந்தது. நிலம் வாங்கிப் போடலாம் என்றுதான் முதலில் நினைத்தார். ஆனால் மகன் ஒலை வீட்டில் இருப்பது அவரை யோசனை பண்ண வைத்தது.

ஒரு நாள் மாலைப்பொழுதில் மருமகளைக் கூப்பிட்டுக் கேட்டார்

"பாப்பா உனக்கு வூடு வேணுமா—இல்ல நிலம் வேணுமா"

"என்னக் கேட்டா. நீங்களாச்சு உங்க பிள்ளையாச்சு"

"அவன் கிடக்கறான்; நீ சொல்லு"

"மாமாவுக்கு என்ன தோணுதாம்"

"மொதல்ல நெலம்னு தோணுச்சு"

"அப்புறம்—"

"—இப்ப வீடுன்னு தோணுது"

"எதுக்கு?"

"எதுக்கோ"

வேம்பு மடியிலிருந்து சுருட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டு புகையை அவள் மூஞ்சிக்கு நேராக ஊதினர்.

அவள் முகம் சுளிக்க, "நாத்தம் கொடலப் பிடுங்குது" என்ருள்.

"அப்படியா—" சிரித்து சுருட்டை அணைத்து காதில் சொருகிய படி வாசலுக்கு வந்தார். இவர் வரவும் வெளியிலிருந்து வேணு வந்தான். அவனைக் கண்டதும் மறுபடியும் சுருட்டைப் பற்ற வைத்துக் கொண்டு உள்ளே வந்தார். வேணு கொல்லைப் பக்கம் சென்ருன்,

"தம்பி, செத்த இப்படி வா" என்ருர். இவராக அழைத்தா லொழிய அவன் எதிரே வருவதில்லை. தாயைப் பல விதத்தில் அவன் கொண்டிருப்பதாக நினைத்தார். அந்த நினைப்பு வந்ததும் துக்ககர மான பல காட்சிகள் மனத்தில் படர்ந்தன. மகனையும் மருமகளையும் பார்த்தார். அவர்கள் மௌனமாக இவர் பேச்சுக்காகக் காத்திருந் தார்கள்.

தலையசைத்து குழந்தையிடம் கதை சொல்வதுபோல, "கயில ரெண்டு காசு இருக்கு. முதல்ல நெலம் வாங்கலாமுன்னு தோணுச்சு. ஆனு இப்ப வூட்ட எடுத்துக் கட்டலாமுன்னு தோணுது. ஒல வூட்டுல எத்தனை நாளைக்குத்தான் இருப்ப—"

வேணு தலையசைத்தான்.

"இவுங்களக் கேட்கணுமா மாமா? நீங்க பெரியவங்க. யோசன பண்ணி ஒண்ணு செஞ்சா தப்பா இருக்குங்களா"

"அதுக்கு இல்லம்மா. உங்களக் கலக்காம ஒண்ணு செய்ய லாமா"

"நாங்க என்னங்க மாமா சொல்லிடப் போருேம்"

பாப்பாவின் சாமர்த்தியத்தில் திருப்தி உற்றதுபோல வேணு பக்கம் திரும்பி, "தம்பி, ராவுத்தர் நெலத்தத் தந்துடப் போறதா ஒரு பேச்சு காதுல உளுந்துச்சு. அதக் கொஞ்சம் விசாரிச்சு வா. பாக்கலாம்"

"சரிங்க அப்பா"

வீடு கட்டும் வேலை தொடங்கியதும் கல்லும் மண்ணும் வண்டி வண்டியாக வந்தன. வேம்பு, தான் சிங்கப்பூரில் கண்ட ஒரு வீட் டைப் பற்றி கொத்தனுரிடம் விவரித்து அது மாதிரி இருக்க வேண்டும்

என்றார். கொத்தனார் அரையுங் குறையுமாக வாங்கிக் கொண்டு தலையசைத்தான். அவர் சொன்னதுபோல இல்லாமல் வீடு வேறு மாதிரியாக எழுந்தது. ஆனாலும் அதுவும் நன்றாக இருப்பதாகவே வேம்புக்குப் பட்டது. அரைக்கால் சட்டையை மாட்டிக் கொண்டு உற்சாகத்தோடு வேலை செய்தார் அந்தத் தெருவிலே தன் வீடு தான் முதல் மாடி வீடு என்பது பெருமையும் களிப்பையும் இவருக்கு அளித்தது மேலெல்லாம் சுண்ணும்போடு நிற்கையில் ஒரு நாள் பாப்பா கேட்டாள், ''என்னங்க மாமா வேஷம் இது?'' என்று.

''நாளைக்கு பேரப் பசங்கக் கிட்ட சொல்ல வேணுமா. எலே' பசங்களா வீட்டுல இருக்கற ஒரு ஒரு கல்லும் உங்க தாத்தா எடுத்து வச்சக் கல்லுன்னு—''

''உங்களுக்கு ரொம்ப ஆங்காரங்க மாமா''

அதை ஏற்றுக் கொள்வது போல சிரித்தார்.

''அவன சுண்ணும்பு வாங்கியாற போவச் சோன்னேனே போயிருக்கானு''

''அவுங்கள அனுப்பிட்டுத்தாங்க மாமா வரேன். சாப்பாட்டுக்கு நீங்க வர்றீங்களா—இல்ல இங்க கொண்டாந்துட்டுட்டுங்களா''

''நீ எதுக்குமா வீணு அலையணும் நானே வந்துடறேன்' என்று கையைத் துடைத்து அவள் பின்னே நடந்தார். இவருக்குப் பிடித்தமான ஆட்டுக்கறி குழம்பு. வயிறு முட்டத் தின்றுவிட்டு எழுந்தார். எழுந்ததும் நடக்க முடியாதது போல இருந்தது. சுவரில் நன்றாகச் சாய்ந்து உட்கார்ந்து, ''ரெண்டு மாசம் இப்படித் தின்னு—மலையைக்கூட உருட்டிடலாம் பாப்பா'' என்றார்.

வெற்றிலை மடித்த பாப்பா பதிலொன்றும் சொல்லாமல் புன்னகை பூத்தாள்.

ஒன்றரை மாதத்திற்குள் வீடு கிட்டத்தட்ட உருவாகியது. நாளை தளம் போடலாம் என்றிருக்கும்போது—மாலைப் பொழுதில் வானம் கருக்க ஆரம்பித்தது. வேம்பு வானத்தையும் வீட்டையும் மாறி மாறி பார்த்தார். கருத்த மழை மேகங்கள் ஒன்றாகக் குவிந்தன. சில்லென்று காற்று அடித்தது. மழைக்கு என்ன பண்ணுவது என்று யோசிக்கையில் தூறல் ஆரம்பித்தது. தூறல் சற்றைக்கெல்லாம் பெரும் மழையாகியது. மழையில் சுவர்கள் கரைந்தன. சிறிது நேரத்திற்கெல்லாம் சுவர்கள் கரைந்து விழலாம் என நினைத்தார். மழை காற்றோடு பெரிதாகப் பொழிந்தது. மூஞ்சியில் விழுந்த மழை நீரைத் துடைத்துக் கொண்டு ''எலே, வேணு'' என்று கத்தினர். இவர் கத்தவும்—வேணு அருகில் வரவும் சரியாக இருந்தது. சுவரைப் பார்த்து அவன் பதறினன்.

''அப்பா, சுவரு விழுந்திடும் போல இருக்கே''

வேம்பு சுவரில் தாவி ஏறி, ''எலே, கீத்தக் கொடு. முடிஞ்ச வரைக்கும் மூடி வைப்போம்'' என்றார்.

அவன் கீற்றை எடுத்துக் கொடுத்துவிட்டு - தகப்பனுருக்கு உதவியாக மேலே ஏறினன். இவன் ஏறவும் காற்று பலமாக அடித்தது. கை பிடித்த கல் நழுவுவது போல இருந்தது.

எம்பி மேல் சுவரைப் பிடிக்கப் போனுன். ஆனல் சுவர் பிடி படவில்லே, தான் நழுவிக் கொண்டு போவது போல இருந்தது.

''அப்பா'' என்று கத்தினன்.

சப்தம் கேட்டுத் திரும்பிய வேம்பு பதறி அவனுக்குக் கை கொடுத்தார். அவன் கை, இவர் கையைத் தொட்டுக் கொண்டு வேகமாகக் கீழே சென்றது. அவர் வேணுவைப் பிடிக்க, இன்னெரு சுவருக்குப் பாய்ந்தார். அவர் கால் வைத்த சுவர் இடிந்து வேணு தலேயில் விழுந்தது.

வேம்பு இன்னெரு சுவருக்குத் தாவ, ''அடப் பாவி பயலே'' என்று கத்தினர். சப்தம் கேட்டு பாப்பா வெளியே ஓடி வந்தாள்.

மழை விடாமல் பொழிந்து கொண்டு இருந்தது.

கற்களே விலக்கி, வேணுவைப் பிணமாகத் தூக்கினர்கள்.

பாப்பா வேம்புவைக் கட்டிக்கொண்டு அழுதாள். இவருக்கு என்ன ஆறுதல் சொல்வதென்று தெரியாமல் தானும் அழுதார்.

மகன் போனது வேம்புவுக்குத் தாள முடியவில்லே. அவசர அவசரமாக வீட்டைக் கட்டி முடித்துவிட்டு ஒரு விடியற்காலேப் பொழுதில் கப்பல் ஏறினர்.

கப்பலிலிருந்தபடி பாப்பா, உயர்ந்தும் தாழ்ந்தும் செல்லும் அலேகளே ஒரு குழந்தையைப் போல ஆச்சரியத்தோடு பார்த்துக் கொண்டிருந்தாள். ●

---

# அக்கம் பக்கம்

சென்னையில் நடக்கும் இலக்கியக் கூட்டங்களின் தலைப்புகளைக் கேள்விப் படுகிறவர்கள் அவர்களது சிந்தனை தூண்டப் படுவதை உணருவார்கள். ஆனால் அந்தத் தலைப்புக்கள் சிந்தனையைத் தூண்டு கிற அளவுக்குப் பேச்சுக்கள் அமைவதில்லை. அந்தத் தலைப்புகளும் கூட சம்பந்தப்பட்ட அமைப்புக்கள் நிதரிசனத்தை நோக்கி வருவ தைக் காட்டுகின்றனவே தவிர அந்த அமைப்புகளுக்கு அவ்விஷயத் தில் ஆழ்ந்த ஈடுபாடு இருப்பதாகக் கருத முடியாது. இந்த அமைப் புக்கள் பேச்சாளர்களைத் தேர்ந்தெடுப்பதன் மூலம் தங்களின் வறு மையை அடிக்கடி தெரிவிக்கின்றன. இந்தப் பேச்சாளர்களோ அன்றைய பேச்சுக்கு, அவை புதிதாக இருக்கிற பட்சத்தில், எதை யாவது கேட்டுத் தெரிந்து கொண்டு வந்து பேசுகிறவர்களாகத்தான் தெரிகிறார்கள். கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர்களில் ஒருவராகக் கருதப்படும் வி. பி. சிந்தன் இந்தமாதிரிப் பேச்சாளர்களில் முதலிடத் தைப் பெறுகிறார். ஏப்ரல் மாதம் இலக்கியச் சிந்தனை என்ற அமைப் பின் ஆண்டுவிழாக் கூட்டத்தில் 'புதிய கவிதை' என்ற தலைப்பில் பேசிய திரு திரவியமும், திரு எஸ். ராமகிருஷ்ணனும், வி. பி. சிந்தனை அடுத்து இடம் பெறுகிறார்கள்.

புதிய கவிதைகளைக் குறித்து அவை கவிதைகள் தாமா என்ப தில் திரவியத்துக்கு சந்தேகம். தெலுங்குக் கவிதை ஒன்றையும், மலையாளக் கவிதை ஒன்றையும் எடுத்துக் காட்டிய திரவியம், புதிய கவிதைகள் ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகளில் எழுதப் படுவதைப் பார்க்கத் தவறி விட்டார். புதிய கவிதைகளைப் பற்றிய தீர்ப்பை ராமகிருஷ்ணன் சொல்ல வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். ஆனால் ராமகிருஷ்ணனுக்கோ புதிய கவிதைகளைக் கண்டு மிரளத் தேவையில்லை என்று நினைப்பு. காரணம், தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றுகிறவரும், புதிய கவிஞருமான மீ. ராஜேந்திரனை அவருக் குத் தெரிந்திருக்கிறது ராமகிருஷ்ணன் பேச்சில் ட்ரைடன்—போப், இலியட், பிலீப்சிட்னி என்ற பெயர்கள் அடிபட்டன. உருவம், உள்ளடக்கம் என்று கவிதையைப் பிரிக்காதீர்கள் என யாரையோ கேட்டுக் கொண்டார். புதிய கவிதைகளைப் பற்றி ராமகிருஷ்ணன் சொன்ன கருத்துக்கள் ஆழ அகலத்தில் அற்பமானவை.

  

இலக்கியச் சிந்தனையின் மாதாந்திரக் கூட்டத்தில் பேசிய கவிஞர் தமிழன்பனின் பேச்சு ஒருவிதத்தில் முக்கியமானதாக இருந் தது. காலம் சென்ற பாரதிதாசனின் கவிதைகளை மரபின் அடிப் படையில் அவர் ஆராயத் தொடங்கியதால் புதிய கவிதைகளுக்கான ரசனை அடிப்படையில் பாரதிதாசன் கவிதைகளின் குறை நிறைகள் தெளிவாகத் தெரிந்தன. பாரதிதாசனின் ஒரு கவிதையைச் சொல்லி அது இப்படி வந்திருக்குமானால் புதுக் கவிதையாக இருந்தி ருக்கும் என்றார் தமிழன்பன். இந்தக் கூற்று புதிய கவிதைகளின் கலைநோக்கான மாறுபாட்டைக் காட்டுகிறது.

இதே கூட்டத்தில் மாதாந்திரக் கதையைத் தேர்ந்தெடுத்த கவிஞர் திரு. பதியின் கட்டுரை கவனிக்கத் தகுந்ததாக இருந்தது. 'மணிக் கொடி' என்ற பெயரில் நாற்பதுகளில் நடந்து வந்திருந்த பத்திரிகையைப் பற்றி பதி தெரிவித்த கருத்துக்கள் அந்தப் பத்திரிகை பற்றிய கட்டுக் கதைகளைத் தகர்ப்பதாக இருந்தது. இந்தப் பத்திரிகையில் எஞ்சிய எழுத்தாளர்கள் மௌனி, புதுமைப் பித்தன், க.நா.சு. மட்டுமேதான். அதுவும் அவர்களின் எழுத்துக்களின் வலுவினால் தானே தவிர அவற்றை வெளியிட்ட பத்திரிகையினால் அல்ல. திரு. பதியின் கட்டுரையில் வேறு ஊக்கம் தருகிற கருத்துக்களும் இருந்தன.

  

கவிதைகள் வாசிக்கப் படவும் வேண்டும். கோட்டோவியங்கள் போல அவை தாளிலேயே தங்குபவை அல்ல. ஆனால் கவிதைகள் வாசிக்கப்படாமலா உள்ளன? வானொலி வாசிக்கிறது. கவியரங்கங்கள் நடக்கின்றன. உண்மைதான் ஆனால் புதிய கவிதைகள் இன்னமும் வாசிப்புக்கு வரவில்லை. எல்லாக் கவிதைகளும் குறைந்தது, கடைசியில் வாசிக்கப்பட. 'வாசி' என்ற அமைப்பு கவிஞர்கள் தங்களது கவிதைகளை வாசிக்கவும், கருத்துக்களைக் கூறவும், கேள்விகளுக்கு விளக்கம் தரவும் ஏற்பட்டிருக்கிறது. இதன் மூன்றாவது கூட்டத்தின் சார்பில் ரோஜர் அயர்டேல் அவரது கவிதைகள் சிலவற்றை வாசித்தார். ரோஜர் இங்கிலாந்தில் பிறந்தவர். அல்ஜீரியா இந்தோசைனா முதலிய நாடுகளில் வேலை பார்த்தவர். ''மூன்றாவது நிகழ்ச்சி'' என்ற பி. பி. சி கலை ஒலிப் பிரிவில் அவரது கவிதைகள் வாசிக்கப்பட்டு ஒலி பரப்பப்பட்டுள்ளன. அவருடைய கவிதைத் தொகுப்பான 'டர்லிங் ப்ரான்சஸ்' அண்மையில் வெளிவந்திருக்கிறது.

கவிதைகளை வாசித்து கேள்விகளுக்கு ரோஜர் பதில் சொன்னார். அவர் கவிதைகளில் ஆங்கிலப் பண்புகள் அந்தமொழி உலக மொழியான பின்னும் இருப்பதாகக் கவிஞர் திரு. ஆர். பார்த்தசாரதி அறிமுகத்தில் கூறியிருந்தார். பார்த்தசாரதி சொல்லத்தான் தனக்கு அது தெரிவதாக திரு. ரோஜர் சொன்னார் ரோஜர் தனது கவிதைகள் பிலிப் லார்க்கின் கவிதைகளின் பாதிப்பு இருப்பதாகத் தெரிவித்தார். ஆனால் தன்னுடைய கவிதைகள் ஹாப்கின்ஸின் ஸ்ப்ரங்ரிதும் கொண்டவைகள் என்றார். கவிதைகளுக்கு முன்பாகத் தான் சப்தத்தையே வைப்பதாக ரோஜர் சொன்னார். பிரிட்டிஷ் கவிதைகள் பற்றுக் கோடலுக்குப் பின்னோக்கிச் செல்வதாகத் தெரிந்தது பிரெஞ்சுக் கவிதைகள் கூட பழைய கவிஞரான வில்லான் கவிதைகளை நோக்குவதாகக் கூட்டத்தில் இருந்த ஒரு பிரெஞ்சுக்காரர் தனியே என்னிடம் சொன்னார். கவிதையின் அமைப்பு மக்களின் சாதாரணப் பேச்சைத் தழுவியதாக இருக்க வேண்டும் என்று ரோஜர் கூறினார். கூட்டத்துக்கு வந்திருந்த மெக்ஸிகக் கடற்பணியாளர் ஒருவர், சாஸர்தான் மக்கள் பேச்சைத்தழுவிக் கவிதை எழுதியதாக ரோஜரிடம் விவரித்தார். ஸ்ப்ரங்ரிதும் என்ற பேச்சு வந்ததும், மொழிபெயர்ப்புகளும் கவிதைகளும் அப்படித்தான் செய்யப்பட்டுள்ளனவா என்று பார்த்தசாரதி என்னிடம் கேட்டார். இன்றைய கவிதைகள் ஸ்ப்ரங்ரிதும் என்று பெயரிடும் அளவுக்குத் தெளிவு படவில்லை என்று தோன்றி

ுலும் அதுதான் அணுக்கமுள்ளது என்பதால் நான் ஆமாம் என்று சொன்னேன்.

தமிழ்க் கவிதைகள் மரபு, புதுமை என்று இடைவெளிப்பட்டு நிற்பதாகவும் இந்த இடைவெளி நீங்க எதுவும் செய்யப்பட்டதாகத் தெரியவில்லை என்றும் ஆர். பார்த்தசாரதி ஒரு கேள்வியை எழுப்பினார். சா கந்தசாமி இதை மறுத்தார். எந்தப் புதுப் புத்தகங்களையும் யாரும் படிக்காமலே கருத்தை உருவாக்கிக் கொள்வதாகக் கந்தசாமி சொன்னார். பள்ளிக் கூடத்துப் புத்தகங்களில் படித்ததற்குப் பிறகு யாரும் எதையும் படிக்கவில்லை என்றும் அவர் சொன்னார். மரபு, புதுமை என்ற இடைவெளியில்லாமல் எழுதப்படுகிற கவிதைகள் உண்டென்பதை திரு பதி எடுத்துக் காட்டினார்.

—ரங்கநாதன்

---

தவிர்க்க இயலாத சில நிர்வாகக் காரணங்களை முன்னிட்டு மே—ஜூன் இதழ்கள் சேர்த்து வெளியிடப் பட்டுள்ளன.

—ஆசிரியர்

---



---

Published by N Mahaaganapathy, I-20, Turnbull Road, Nandanam, Madras-600 035. Prin ed by M. K. Swamy at Prem Press, 8, M. K Amman Koil Street, Madras-600 004. Editor : N. Krishnamurthy